# சித்தர் நெறி

(வானொலி உரைகள்)



ஆசிரியர்

கவிச்செம்மல்

டாக்டர் ரெ. முத்துக்கணேசன்



விற்பனை உரிமை

செல்வி பதிப்பகம்

காரைக்குடி

## நன்றி

இவ்வுரைகள் அனைத்தும், அகில இந்திய திருச்சி வானொலியில் ஆற்றியவை. பல்வேறு ஆண்டுகளில், பல்வேறு தேதிகளில் ஆற்றிய இவ்வுரைகளை வெளியிட, இசைவு தந்த திருச்சி வானொலி நிலையத்தினருக்கு என் நெஞ்சு நிறைந்த நன்றி!

வணக்கம்.

டாக்டர் ரெ. மு.
கல்லுக்கட்டி மேற்கு
காரைக்குடி. 623001
20—12—1985

## ஆசிரியரின் பிற நூல்கள்

### கவிதை

முத்துமாலை (முதல் தொகுதி)
முத்துமாலை (இரண்டாம் தொகுதி)
முத்துமாலை (மூன்றாம் தொகுதி)
அமுதம் (குழந்தைக் கவிதைகள்)

### கட்டுரை

தமிழர் வாழ்த்து.

### உரைநூல்

முத்தொள்ளாயிரம்
தமிழ்த் தொகை
ஞானத் தமிழ்.

## பொருள்



ஆசிரியரின்

'நல்லுரை வெண்பா'

ஆங்கிலத்தில்

**"RUBIES OF WISDOM"**

என்று V. RM. Chettiar B. A., அவர்களால்

மொழி பெயர்க்கப்பெற்றுள்ளது.



# இலக்கிய தூதுவர்கள்

## -கண்ணன்-

ஊரில் திருவிழா. பல்வேறு ஊர்களிலிருந்தும் மக்கள் வந்துகூடினர். காளையர் கூடினர். கன்னிப்பெண்கள் கூடினர் காளை ஒருவன் கன்னிப் பெண் ஒருத்தியைக் கண்ணுற்ருன். அவளும் கண்டாள்; கண்கள் கலந்தன; காதல் பிறந்தது; பின் பிரிந்து சென்றுவிட்டனர். தலைவன் தன்காதலைத் தெரி-வித்து, அவள் கருத்தை அறிய எண்ணினான். தன் ஊரில் அன்று அரும்பிய மலர்மொட்டு ஒன்றைப் பறித்தான். அதைத் தோழன் மூலம் காதலிக்கு அனுப்பிவைத்தான். அம்மலரைப் பெற்ற காதலி தனக்கும் உடன்பாடுதான் எனத் தெரிவிக்க அன்றலர்ந்த மண மலர் ஒன்றைத் திரும்ப அனுப்பி வைத்தாள். தலைவன் கருத்தை ஏந்திச்சென்ற மலர்மொட்டு தலைவியின் கருத்தைப் பெற்று மலர்ந்த மலராகத் திரும்பி வந்தது. இவ்வகையில் கருத்தைத் தெரிவிக்கும் தூதுப்பொரு-ளாக முதன்முதலாகச் சென்றது மலர். பின் பறவையினங்கள் தூதுப் பொருளாகச் சென்றன. காலம் சென்றது. நாக ரிகம் வளர்ந்தது நாடுகள் பெருகின. காதல் வாழ்க்கைக்குப்

பயன்பட்ட தூதுமுறை அரசியல் வாழ்க்கைக்குப் பயன்படத் தொடங்கியது. கருத்தை ஏந்திச்சென்ற தூதுப் பொருள்கள் மாறின. உணர்வை ஏந்திச் செல்லும் மனிதர்கள் தூதுவர்களாயினர். அக்காலத்தே வாழ்ந்த தூதுவர்கள் பெரும் புகழினை அடைந்திருந்தனர்; நிறைந்த சிறப்பினைப் பெற்றிருந்தனர்: அறத்தோடு நின்று பணியாற்றும் அறிவைப் பெற்றிருந்தனர்; அன்புடையவர்களாக இருந்தனர்; மக்கள் நல்வாழ்வு வாழ, நாடுகளுக்கு இடையே அறத்தோடு இயைந்த நல்லாட்சியே நடைபெற வேண்டுமென்று தூதுவர்கள் எண்ணினர்கள். ஒற்றுமையைக் காக்க முற்பட்டார்கள். அவ்வழியே செயல்ஆற்றவும் துணிந்தார்கள். கேவலம், அரசர்கள்தம் படைபலத்தைக் கண்டு தூதுவர்கள் மருண்டார்கள் இல்லை; இன்பங்களைக் கண்டு அவற்றுள் மூழ்கினர்களில்லை; அரசனது சினத்திற்கும் அஞ்சினர்களில்லை; ஆகவேதான் அச்சமற்றவர்களாய் அருளுடையவர்களாய் அரசனிடத்தே நீதியை-அறத்தை-நெறியையெடுத்து இயம்பச் சென்றனர் தூதுவர்கள். இவ்வாறு அரசியல் வாழ்வில் தோன்றி அறிவுரை பகர்ந்த தூதுவர்களில் மிகச்சிறந்த ஓரிடத்தைப் பெற்றவர் கண்ணபிரான் ஆவார். பாரத அரசியலில் அவர் ஆற்றிய செயல் அளவிடற்கரியதாகும். பாரதக் கதையை நாமெல்லாம் நன்கறிவோம். வடமொழியில் வியாசர் இயற்றினர். அதன் சுவையை, கொங்கலர் குலத்துத் தோன்றிய வரபதியாட்கொண்டான் என்ற மன்னவனறிந்தான். தமிழில் பாரதக் கதையைக் காப்பியமாக்க எண்ணினன். மாபெரும் புலவர் வில்லிபுத்தூராரை வேண்டிக்கொண்டான். திருமால் அடியவரான வில்லிபுத்தூராரும் இசைந்து, தனிப்படைப்பாக, தனிப்பெருங் காப்பியமாக அதனைஆக்கித் தந்துள்ளார். அவர் படைத்துத் தந்த காப்பியத்துள், தூதுவர்களில் சிறந்த தூதுவராக எவ்வாறு "கண்ணனை" நமக்குக் காட்டுகிருர் என்பதை நாம் காண்போம்.

நமக்குத் தூதுவனுக்குரிய இலக்கணத்தை வடித்துத் தந்த பெரியார் திருவள்ளுவராவார். அவர், தூதுரைக்கச்

செல்பவர்களுக்கு வேண்டுவன இன்றியமையாத பண்புகள் மூன்று என்று வரையறுத்துச் சொல்லுகின்றார். ஒன்று-தூதுவர் அன்புடையவராயிருக்க வேண்டும். அன்பாவது-மக்களிடத்தும்-நாட்டிடத்தும் உயிர்களிடத்தும் நேயமுடையதாயிருப்பதாகும். உயிர்பறிக்கும் போர்க்குரிய சூழ்நிலை நிகழா வண்ணம் அறத்தைப் பாதுகாப்பதாகும். அடுத்து, அறிவுடையவராயிருக்க வேண்டும். அறிவாவது-உலகோடு ஒத்துப்போய் சூழ்நிலைக்கேற்ப நடப்பதாகும். கருதியதை முடிக்க எண்ணிச் சிறிது விட்டுக்கொடுத்து, பணிவோடு தம் கருத்தை நன்கு பதியுமாறு எடுத்துச் சொல்லும் திறமையாகும். இறுதியாக-ஆராய்ந்த சொல்வன்மை உடையவராயிருக்கவேண்டும். இதனையே,

'அன்பறிவு ஆராய்ந்த
சொல்லன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத
மூன்று' தூது பா. எண். 682

என்று குறள் கூறும். இம்மூன்று பண்புகளை உடைய தூதுவர்களே மிகச்சிறந்த தூதுவர்கள் என்று இலக்கணம் காட்டுகின்றார் வள்ளுவர். இவ்வழி நின்று செயல் ஆற்றும் பாத்திரமாகவே நமக்குக் கண்ணனைக் காட்டு கின்றார் வில்லிபுத்தூரார்.

பஞ்சபாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்தனர். பின் ஓராண்டுக் காலம் மறைந்து நாட்டில் வாழ்ந்தனர். அதன் பின்னர் வெளிப்பட்டுத் தங்களுக்கு உரிய அரசைக் கேட்டனர். துரியோதனன் தர மறுத்தனன். பஞ்சபாண்டவர்களில் தருமரைத் தவிர மற்ற நால்வரும் போர்முரசு கொட்டுமாறு துடித்தனர். ஆனால் இந்த நிலையிலும் சமாதானத்தை விரும்பினார் தருமர். இறுதியாக, கருணைக்கடலான கண்ணனைச் சமாதானத் தூதுவராகத் துரியோதனன்பால் அனுப்புகின்றார் தருமர். கண்ணனும்

தூதுவராகச் சென்றார். விதுரன் வரவேற்றுத் தன் மாளிகையில் விருந்தளித்தான். அங்கு தங்கினார். மறுநாள் துரியோதனனைக் காணச் சென்றார். கொலுவிருக்கும் துரியோதனன் வரவேற்று இருக்கையில் அமர்த்தினான். தன்னம்பிக்கையும், உயர்ந்த தோற்றப்பொலிவும் கொண்ட கண்ணன் துரியோதனனை நோக்கிப் பேசுகின்றார். 'குருகுலமரபிலே பிறந்த அரசனே! உன் உடன்பிறந்த பாண்டவர்கள் உன்னிடம் சூதினால் அரசை இழந்தார்கள். நீ சொன்ன சொற்படி அயலார் போலக் காடடைந்தார்கள். பன்னிரண்டு ஆண்டுகளும் வருந்திக் காட்டில் வாழ்வைக் கழித்தார்கள். இப்பொழுது அவர்களுக்குரிய அரசைக் கேட்கின்றார்கள். சொன்னபடி நீதான் கொடுக்கவேண்டும். அவர்களுக்குரியவற்றைப் பகையுணர்ச்சியின்றி நட்பொடு கொடுப்பாயாக! எனக்கூறுகின்றார்.

சூதினால் அரசிழந்து நின்துணைவர்,
சொன்னசொல் லும்வழு வாதுபோய்
ஏதிலார்கள் என நொந்து தண்ணிழல்
இலாத கானிலிடை எய்தியும்,
தீதிலா வகைகுறித்த நாள்பல
கழித்து வந்தனர் செகத்திலில்
கோதிலாத குருகுல மகிப!
அவர்உரிமை நண்பொடு கொடுத்தியே!

— கிருட்டிணன் தூதுச் சருக்கம் பா. எ. 111

என்கிறார். இந்த இடத்தில் கண்ணன் இனிய மொழியில் அடக்கத்துடன் வேண்டுகிறார். துரியோதனன் மரபை உயர்த்திப் பேசுகின்றார். அவனும், குரு மரபும் வாழ வேண்டிப் போர் தவிர்க்கப்பட வேண்டும் என்ற ஆவலோடும் அவர்கள்பால் அன்பு உணர்ச்சியோடும் பேசுகின்றார். இவ்வகையில் தூதுவராகிய கண்ணனின் அன்புள்ளம் வெளிப்படக் காண்கின்றோம். ஆனால், இத்தகைய அன்புரையை, அறிவுரையைக் கேட்டும் மாறவில்லை துரியோதனன். மாறாக

மறுத்துரைக்கின்றான். இவ்வுலகில் நீ வெறுத்தாலும் சரி, மன்னர்கள் எள்ளி நகைத்தாலும் சரி, நான் பாண்டவர்களுக்கு ''ஈ'' - இருக்கும் இடம்கூடக் கொடுக்க மாட்டேன் என உரைத்து மறுக்கின்றான்

''ஈ'' யிருக்கும் இடமெனினும் இப்புவியல்
யான் அவர்க்கு அரசுஇனிக் கோடேன்''
— கிருட்டினன் தூதுச்சுருக்கம் பா. எ. 114

எனச் சினத்தோடு உரைக்கின்றான். இவ்வாறு சினம் கொண்டு மறுத்துரைக்கும் துரியோதனனின் சொல்லை முடிந்தமுடிபாக எடுத்துக்கொள்ளவில்லை தூதுவராகிய கண்ணன். நிலையை ஆராயத் தலைப்படுகின்றார். உறுதியோடு இருக்கும் துரியோதனனுடைய மனநிலையை உணருகின்றார். ஆனால் அதே நேரத்தில் பாண்டவரின் மனநிலையும் புரிகின்றது. ஒருபால் துரியோதனாதியர்களின் பிடிவாதம் தலைதூக்கி நிற்கக் காணுகின்றார். மற்றொருபால் நீதிக்குப் போராடும் பாண்டவர்களின் அற உணர்ச்சி தலை தூக்கி நிற்கக்காணுகின்றார். இந்த நிலையில்எப்படியும் போரைத் தவிர்த்துக் குருமரபு சிதறுவண்ணம் ஒற்றுமைப் படுத்த வேண்டுமே? நீதியும் அறமும் நிலைக்கவேண்டுமே? எவ்வாறு? என்று சிந்திக்கின்றார். முடிவில், துரியோதனாதியர்களோடு சிறிதுவிட்டுக் கொடுத்து ஒத்துப்போகும்] அறிவைக் கடைப் பிடிக்கின்றார் கண்ணனாகிய தூதுவர்.

மீண்டும் பணிவோடும், ஆனால் ஆராய்ந்த சொல்லுறுதியோடும் துரியோதனனை நோக்கிப் பேசுகிறார் கண்ணன். 'மாலை உலவப் பெற்ற பரந்த மார்பை உடையவனே! பாண்டவர்களுக்குரிய அரசு முழுவதையும் நீ கொடுக்கக் கருதவில்லை; போகட்டும். அதில் பாதியாயினும் கொடுப்பாய் எனக்கேட்கிறார். அதற்கும் துரியோதனன் மறுத்துவிடுகிறான். இன்னும் இறங்கி, அவர் ஐவருக்கும் ஐந்து ஊர்களையாவது நீ கொடு எனக் கேட்கிறார். அதனையும் துரியோதனன் மறுத்துவிடுகிறான்.

'கார்வழங்க உருமெனச் சினத்திநெடு
கண்ணிலான் மதலை கழறவும்
பார் வழங்க நினைவில்லை யேல்அவனி
பாதி யாயினும் வழங்குவாய்
தார் வழங்கு தடமார்ப! வென்ன அது
தானும் மன்னவன் மறுக்க ஐந்து
ஊர்வழங்கு கென உற்று இரந்தனன்
இவ்வுல கெலாம்உலவும் உந்தியான்,
— கிருட்டிணன் தூதுச்சருக்கம் பா. எ. 115

இவ்வுலகெலாம் உதவும் உந்தியானாகிய கண்ணன் இரந்தனன்-யாசித்தான்என உரைக்கின்றார் வில்லிபுத்தூரார். மிகஉயர்ந்த ஒருவன், அன்பைக் காக்க இரந்தனன் என்று உரைக்கின்றார். போர் நடைபெறுமானால் பாண்டவர்கள் வெற்றிபெறுவது உறுதி என்ற உண்மையைத் திண்ணமாகக் கண்ணன் அறிந்திருந்தும், தரமற்ற துரியோதனன்பால் யாசித்துக் கேட்பதின் மூலம், தூதுவராகிய கண்ணபிரானது பேரன்பும், விட்டுக் கொடுத்து ஒத்துப்போய் அறத்தை நிலைநாட்டும் அறிவும், ஆராய்ந்த சொல்வன்மையும் புலப்படக் காண்கின்றோம்.

இவ்வாறு, திருவள்ளுவர் கூறிய மூன்று பண்புகளுக்கும் முழுவடிவமாக, பெறுதற்கரிய தூதுவராகத் திகழ்கிறார் பாரத இலக்கியத்தில் கண்ணன். இத்தூதுவராகிய கண்ணனிடத்து உள்ளத்தைப்பறிகொடுத்ததனால் அன்றோ

''மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராயணா வென்னா நாவென்ன நாவே!
— ஆய்ச்சியர் குரவை ; சிலப்பதிகாரம்,

எனத் தூதுசென்ற கண்ணனை இளங்கோவடிகள் போற்றிப் புகழ்கின்றார்.

# நந்திக் கலம்பகம்

உலகில் உயிரினம் தோன்றியது. மக்கள் தோன்றினர் சமுதாயமாக வாழத் தொடங்கினர். காலம் சென்றது. மொழி எனும் கருவியும் வளர்ந்தது. எண்ணங்கள் உயர்ந்தன. சிந்தனைகள் வலுப்பெற்றன. கவிஞர்கள் தங்கள் கருத்துக்களை அழகுமொழியில் வெளியிடத் தொடங்கினர். அவர்கள் இயற்கையின் அழகை அனுபவித்தனர்; அறத்தின் பயனை உணர்ந்தனர்; அறமும் அழகும் அவர்கள் உள்ளத்தைப் பண்படுத்தின. அதன் பயனாக அவர்கள் உள்ளத்தே பல்வேறு அனுபவ உணர்வுகள் எழுந்தன. அவ்வனுபவ உணர்வு சொற்களோடு கலக்கும்பொழுது அவை கவிதைகளாகப் பிறந்தன இவ்வாறு ஆயிரம் ஆயிரம் கவிதைகளைத் தந்தனர் நம் தமிழ்க் கவிஞர்கள். அவர்கள் தங்கள் தங்கள் கவிதைகளைப் படைக்கும் பொழுது மனித வாழ்வின் உயர்வை ஆராய்ந்தனர்; அதே நேரத்தில் வாழ்வின் தாழ்வையும் ஆராய்ந்தனர்; இன்ப துன்பங்களால் உருவாகும் வாழ்வின்

இயற்கையை ஆராய்ந்தனர். தங்களைச் சூழ்ந்து வளரும் சமுதாயத்தின் கட்டுக் கோப்பையும் பண்பாட்டையும் ஆராய்ந்தனர்; சமுதாயத்தின் முன்னேற்றத்தை எண்ணினர்; சமுதாய முன்னேற்றத்திற்கு உதவியாகவும் காப்பாகவும் அமைய வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு தங்கள் கவிதைகளைப் படைக்கத் தொடங்கினர்; விருப்பு வெறுப் பின்றிக் கவிதைகளை யாத்தனர்; நல்லன செய்யும் தனி மனிதனைப் பாராட்டினர்; அவனது வீரத்தைப் புகழ்ந்தனர்; அவனது கொடைத்தன்மையை நிலைத்த சொற்களில் கவிதை பாடினர். இவ்வாறு தனிமனிதர்களைப் பாராட்டும்பொழுதே சமுதாயத்தை மறந்தார்களில்லை கவிஞர்கள். தனிமனிதனது வீரம் —கொடை—காதல்—அன்பு எல்லாமும்சமுதாயத்திற்கு உரமாகும் நிலையைக் கண்டு, நிலைக்க வேண்டியே, தனி மனி தனையும் சமுதாயத்தையும் ஒருசேர வாழ்த்தினார்கள்.ஆற்றல் வாய்ந்த தனிமனிதனின் தலைமையையும், அவன் வழியில் உருவாகும் சமுதாயத்தின் நிலைமையையும் கண்டு அந்த உறவை எண்ணிக் கவிதைகளை யாத்தனர். இவ்வாறு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த கவிதைகள் பல தோன்றின. வழிகாட்டப்பிறந்த இக்கவிதைகளின் தொகுதியே 'இலக்கியம்' என்ற பெயரினைப் பெற்றது, இங்ஙனம் எழுந்த இலக்கியங் களைப் பேரிலக்கியம் — சிற்றிலக்கியம் எனப்பகுத்தனர். அதில் சிற்றிலக்கியங்களைத் தொண்ணூற்றாறு என வகைப்படுத்தினர். தூது-உலா-பிள்ளைத்தமிழ்-சதகம்—மாலை -மடல்—சிந்து-கோவை-முதலியான சிற்றிலக்கிய வகைகளாகும் அவற்றுள், சுவைமலிந்த இலக்கியந்தான் பல்லவ மன்னனைப் புகழ்ந்து பாடும் 'நந்திக்கலம்பகம்' என்ற சிற்றிலக்கியம்.

இக்கலம்பகம் கிட்டத்தட்ட ஆயிரத்துநூறு ஆண்டுகட்கு முற்பட்டதென்பர். இதன்காலம் கி. பி. ஒன்பதாம் நூற் றுண்டின் முற்பகுதியாகும். இக்கலம்பகம் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு தொண்டைமண்டலத்தை ஆண்ட மூன்றும் நந்திவர்ம பல்லவனைப்பற்றியது.இப்பல்லவமன்னன் சைவசமயத்தினன். சிவபெருமான்பால் எல்லையில்லாக்

காதல்பூண்டவன். இவன் கி. பி. 847 முதல் 872 வரை ஆட்சி செய்தான் என சரித்திரஆய்வாளர் கூறுவர். இவன் பெரும் படை கொண்டு பகைவரைத் தெள்ளாறு என்ற இடத்தே முதன்முதலில்போரிட்டு வெற்றிபெற்ருன். அவ்வெற்றியால், இவன் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என்றழைக்கப்பெற்றனன், இவன் கல்வியிலும், போர்வீரத்திலும் சிறந்து விளங்கினுன் இவன் தமிழ்க்காவலன் ஆவான்.

இவன் தன் காலத்தே வாழ்ந்த பாரதம் பாடிய பெருந்தேவனுரைப் பெரிதும் போற்றினுன். இவன் மல்லைவேந்தன், மயிலைக்காவலன், சந்திரகுலப் பிரகாசன், அவனிநாராயணன் தொண்டை வேந்தன் என்றெல்லாம் சிறப்பித்து அழைக்கப் பெற்றவன். இத்தகைய மன்னனது இறையன்பை, போர் வீரத்தை, கொடைத் தன்மையை, தமிழ்க்காதலை, பண்பைப் புகழ்ந்து கூறுகின்றது இந்நூல். இவ்விலக்கியத்தைப் பாடிய கவிஞர்யாரென்று தெரியவில்லை; ஆனுல் இக்கவிஞர்பெருமான் சிவபெருமானடி தொழும் அடியவரென்பதும், தம்மை ஆதரித்த நந்தி மன்னன்பால் பெரிதும் நன்றியுடையவர் என்பதும் காணக் கிடைக்கின்றன. அவர் பாடிய அகப்பாடல் ஒன்றைப் பார்ப்போம்.

நந்திக் கலம்பகம்காட்டும் அகப்பாடல்கள்முழுதும் இன்பச் சுவை மலிந்த பாடல்களாகும்; அவை இன்ப உணர்வை நமக்குப் பிழிந்து தருகின்றன; காதல் பண்பை அறிவிக்கின்றன; காதலைப் பெறுவதற்காக எவ்வகைத் துன்பத்தையும் தாங்கும் ஆற்றலைத் தலைவி எவ்விதம் மேற்கொள்ளுகிருள் என்பதைப்புலப்படுத்துகின்றன; காதலால் பண்பட்டு வளரும் மனநிலையைச் சித்திரிக்கின்றன; அகம்முழுதும் பெரும்பாலானவை கைக்கிளைப் பாடல்களே! கைக்கிளை என்பது ஒருதலைக் காமம். நந்திமன்னனை ஒரு பெண் காதலித்தாள்; ஆனுல் அம்மன்னன் அவளைக் காதலிக்கவில்லை; அவளைத் திரும்பிக் கூடப்பார்க்கவில்லை. இந்த நிலையில் பெண்தானே விரும்பிக் காதலித்து, அக்காதலால் வாடுகிருள். இத்தகைய ஒருதலைக் காதலைப் பெண்பாற் கைக்கிளை எனச் சொல்வர் இப்பாடல்கள்

மிருந்து காணப்படுவது இந்நூல். ஒருபெண் காதலால் வாடும் நிலையைக் காண்போம்.

நந்தி மன்னன் பட்டத்துயானை மேல் உலா வந்தான். அம்மன்னன் அழகில் தன்மனத்தை இழந்தாள் ஒருபெண். நாட்கள் சென்றன. காதல்முற்றியது; அவனை நினைந்து வாடினாள்; உணவு செல்லவில்லை; உடல் மெலிந்தாள்; படுத்த படுக்கையாய்க் கிடந்தாள்; அடிக்கடி மயக்கமுற்றாள்; உடலெல்லாம் வேகின்றது என்று கூறி அலறினாள். தோழியர்கள் பார்த்தனர். நோயைப் போக்க ஒவ்வொருவரும் ஒவ்வொரு மருந்தினைக் கூறினர். பச்சிலையை அரைத்து இட்டனர். பக்குவமாய் மருந்தினை உண்ண வைத்தனர்; ஒன்றிலும் பயனில்லை; மாறாக நோய்மிகுந்தது; இந்த நிலையில் மயக்கம் தெளிந்த பெண், தன் தோழியர்களை நோக்கிச் சொல்லுகிறாள் "நீங்களெல்லாம் இங்கு என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? எனக்கு என்ன நோய் என்பதையறியவில்லையா! நான், நந்தி மன்னனையே நினைந்து உருகுகின்றேன் என்பது கூடவா உங்களுக்குத் தெரியவில்லை. இந்தநோய்க்கு மருந்து, அவனிடம் என்னைக் கொண்டுசென்று, காதல்மயக்கத்தைத்தருகின்ற அவன் தன் தோள்களோடு சேர்த்துவிடுவதுதான். அவ்வாறு செய்யாமலிருக்கிறீர்களே! அல்லது அவன் புகழையாவது பாடுங்கள் கேட்கிறேன்! நான் எங்கே? அம்மன்னன் எங்கே? அவனோ மாமல்லபுரத்துத் தலைவன்; அத்தலைவன் உலாவரும் குதிரை அல்லது யானை முதலியவற்றின் அடிச்சுவடுகளில் ஒன்றையாவது, என்னைத் தூக்கிக் கொண்டுபோய்க் காட்டக் கூடாதா! என் உடலெல்லாம் எரிகின்றதே! அவன் நாட்டில் ஓடும் காவிரி நீரையாவது கொண்டுவந்து என் உடல் குளிர என்மேல் ஊற்றி ! நீராட்டக்கூடாதா! இதுபோன்ற செயல்களைச் செய்யாது, வேறு பயனில்லாத ஆயிரம் செயல்களைச் செய்து கொண்டிருக்கிறீர்களே!" —என்று அங்கலாய்த்துக் கொள்கிறாள் அப்பெண்.

மாட்டாதே இத்தனைநாள்
மால்நந்தி வான்வரைத்தோள்
பாட்டாதே மல்லையர்கோன்
பரி, யானைப் பருச்சுவடு
காட்டாதே கைதைப்
பொழில்உலவும் காவிரிநீர்
ஆட்டாதே வைத்தென்னை
ஆயிரமும் செய்தீரே !

"ஆயிரமும் செய்தீரே "—என்பது பாடலின் ஈற்றடியாகும். நோய்க்கு மருந்துண்டு! காதல் நோய்க்கு மருந்தேது? காதல் முற்றியதனால் நந்திமன்னனோடு தொடர்புடைய குதிரை, யானை, காவிரிநீர் போன்ற பொருள்களோடு ஒன்றிப் பேசுகின்றது காதல் உள்ளம். புனிதமானது என்ற கருத்தில் ஆறு—குளம்—முதலியவற்றின் நீரைத் தெளித்துக் கொள்வது பழக்கமல்லவா ! அம்முறையில் நந்திநாட்டுக் காவிரி நீரையாவது தன்மேல் ஊற்றச் சொல்லுகின்றது காதல் உள்ளம். காதல்கொண்ட அவனை அடையத்துடிக்கின்ற வேட்கையே இங்குச் சொல்வடிவில் 'ஆயிரமும் செய்தீரே' என்று பேசக் காண்கின்றோம். அத்தகைய சொல்லைப் பெய்து, அப்பெண்ணின் காதல் ஏக்கத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் கவிஞர்.

நந்திக் கலம்பகம் கலம்பகங்களுக்குள்ளே காலத்தால் முந்தியது; வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. கலம்பகம் என்ற சொல் கலந்திருப்பது என்ற பொருளை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகும். பலவண்ணப்பூக்களை ஒன்றுசேர்த்து மாலையாகத் தொடுப்பது போன்று, பலவண்ணப்பாக்களை அந்தாதி முறை அமையப் பாடித்தந்த இலக்கியமே கலம்பகம் என்ற பெயரினைப் பெற்றது. நந்தி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட இக்கலம்பகம் பலவகை உறுப்புகளைக் கொண்டது. அவை காலம், புயவகுப்பு, இரங்கல், ஊசல், கைக்கிளை, சம்பிரதம், மதங்கியார், தூது,

மறம், புறம், என்பனவாகும். இக்கலம்பகத்திற்கு முன் இத்தகையதொரு இலக்கியம் எழுந்ததாகத் தெரியவில்லை; ஆகவே இதனைப்பாடிய கவிஞர், தாமே புதியதொரு நெறியை வகுத்துக்கொண்டு பாடித்தந்துள்ளார் என்றே தெரிய வருகின்றது. இக்கலம்பகத்தில் கவிஞர் பல்வேறு வகைப் பாவினங்களைப் பாடியுள்ளார். அவை அந்தாதி முறையில் அமையுமாறு பாடியுள்ளார்; ஆனால் இடையில் அந்தாதி முறை அமையவில்லை; ஆய்ந்து பார்க்குமிடத்து. இடையில் செருகுகவிகள் சேர்க்கப்பட்டிருக்கலாம். அவை நந்தி மன்னனைப் பற்றிய தனிப்பாக்களாகும். பொதுவாக, நந்திக் கலம்பகப்பாக்கள் பழச்சாறு போல் இனிக்கின்றன; இசை இன்பம் அளிக்கின்றன. எடுத்துக்காட்டாக,

''மங்கையர்கள் புனல்பொழிய மழைபொழியும் காலம்
மாரவேள் சிலைகுனிக்க மயில்குனிக்கும் காலம்

கொங்கைகளும் கொன்றைகளும் பொன்சொரியும் காலம்
கோகனக நகைமுல்லை நகைமுகைக்கும் காலம்

செங்கைமுகில் அனையகொடைச் செம்பொன்செய் ஏகத்
தியாகி எனும் நந்தியருள் சேராத காலம்

அங்குயிரும் இங்குடலும் ஆனமழைக் காலம்
அவரொருவர் நாமொருவர் ஆனகொடுங் காலம்!''

என்று பாடலில் இசையுணர்வும் தலைவியின் அவல உணர்வும் மாறி மாறி ஒலிக்கக் காணுகின்றோம்.

இவ்வாறு கற்பாருக்குக் கற்கண்டாய், வரவாற்று ஆய்வாளருக்குப் பெருந்துணையாய் நிற்கும் இந்நூலைப்பாடிய கவிஞர் யாரெனத் தெரியவில்லை. இந்நூல் பிறந்த வரலாறு கூறும் கதைகளெல்லாம் புனைகதைகளேயாகும். அறம் வைத்துப்பாடியது என்பனவெல்லாம் கற்பனையே ஆகும்! கவிஞர் பெருமான் நந்தி மன்னன்பால் பெருங்காதல் பூண்டு, நன்றிக்கடன் ஆற்றுமாப் போலே இந்நூலை அவன்மேல் இயற்றியமை மிக நன்குகத்தெரியக்கிடக்கின்றது. இக்கவிஞா

இலக்கியம் பயின்றவர் என்றாலும், முத்தொள்ளாயிரத்தின் பால் அதிக ஈடுபாடு உடையவர் என்றும் தெரிகின்றது. அவர் பாடிய நூலில் ஒவ்வொரு பாவிலும் முத்தொள்ளாயிரம் கொலுவீற்றிருக்கக் காணலாம். அதன் அடி ஒற்றியே தம் பாடலை யாத்தமை நன்கு அறியலாம்.

''இலக்கியத்திற்கு வேறு எத்தன்மை
இருப்பினும் போதாது; உணர்த்தும் ஆற்றல்
இருத்தல் இன்றியமையாதது; உணர்த்துதல்
இல்லையேல் அது இலக்கியம் ஆகாது.
புலவரின் மனத்தில் விளங்கிய அனுபவமே,
படிப்பவரின் மனத்திலும் விளங்குமாறு
செய்தல் வேண்டும்; ஒரு மனத்திலிருந்து
மற்றொரு மனத்திற்கு அந்த அனுபவம்
மாறி அமையவேண்டும்.'— என்று

இலக்கியக் கொள்கையை வகுத்துக் காட்டுகின்றார் ஆபர் கிராம்பி (ABER CROMBIE) என்ற பேரறிஞர். அவர்தம் கொள்கை ஒப்ப, நந்திக் கலம்பகக் கவிஞரும், தம் அனுபவக் கருத்தை, தாம் எண்ணி எண்ணி இறும்பூதெய்திய இன்பத்தை, படிப்பவர்களாகிய நம் உள்ளத்திலும் உணர்த்தும் ஆற்றலை நாம் அறியலாம். உண்மையிலேயே சமுதாய வளர்ச்சிக்கு உறுதுணையானது என்று தாம் கருதிய காதல் உணர்வை, வீர உணர்வை, கொடைவழங்கும் மன உணர்வை, அன்பு உணர்வை, மிக அருமையாக நம் உள்ளத்தே பதியவைக்கக்காணுகின்றோம், சுவை அனைத்தையும் ஒன்றாக்கி வைத்த பலாப்பழத்தினைப்போன்று, கவிதைகள் அனுபவ உணர்வுகளைத் தாங்கி நமக்கு இன்பம் பயப்பதை நாம் சுவைக்கலாம், இவ்வகை உணர்வு இலக்கியங்கள் தனி மனிதனைப்பற்றி எழுந்தாலும், அவை ஒரு சமுதாயத்தின் நல்லெண்ணங்களை வளர்த்துப் பண்படுத்தும் சமுதாய இலக்கியமாகத் திகழ்கின்றன. மேலும் அவை காலம் காலமாக மனித உள்ளங்களில் வாழ்கின்றன!

# சித்தர் நெறி

நாம் இறைவழிபாடு செய்யத் திருக்கோயிலுக்குச் செல்லுகின்றோம். அங்கு இறைஉருவை மறைத்துத் திரையிடப்பட்டுள்ளது காலை வழிபாடு தொடங்க இருக்கின்றது. திருவிளக்கினை ஏற்றுகின்றார்கள். ஒலி எழுப்புகின்றார்கள். திருவிளக்கினை ஏந்திக் காட்டுகின்றார் அருச்சகர். அவ்வொளியில் இறைவன் திருவுருவைக் காணுகின்றோம். அவன் அருளில் திளைக்கின்றோம். இவ்வாறு நாள் தோறும் கோயிலில் நடைபெறும் அமைப்பு முறைகள் நமக்கு ஒரு பெரிய தத்துவத்தை உணர்த்துகின்றது. இவ்வுலக வாழ்வில் இறைவனைக் காணு வண்ணம் மாயை என்ற திரையிடப்பெற்றிருக்கின்றது. மும்மலங்கள் என்ற திரைகள் மறைந்துக் கொண்டிருக்கின்றன. ஞான விளக்கு நமக்கு கிடைத்து விட்டால், மாயை, மும்மலங்கள் என்ற திரைகள் தாமாகவே அகன்று விடுகின்றன. பின்பதியாகிய இறைவனைக் காணலாம். இவ்வாறு பாசங்களாகிய திரைகள் அகலப் பெற்றுப்பதியாகிய இறைவனைக் கண்டு அவன் திருவருளை ஞானிகள் பெறுகின்றனர். யோக நெறியில் இறைவனைச் சித்தத்தால் சிந்தித்து உணர்ந்து கண்டு சித்தம் தெளிந்த

ஞானிகளைச் ''சித்தர்கள்'' என்றே தமிழ்ப் பெருமக்கள் அழைத்தனர். அனுபூதி ஞானம் பெற்ற இச்சித்தர்கள் தமிழகத்திலே பிறந்து வளர்ந்தவர்கள்; ஒருவனே தேவன் என்ற தெய்வ நெறிக் கொள்கையை உடையவர்கள்; இவ்வுலகிற்கு இறைவன் அடிப்படையானவன் என்பதை உணர்ந்தவர்கள்; இவர்கல்ளி சிலர் காயசித்தி பெற்றவர்கள்; சிலர் அட்டமாசித்தி பெற்றவர்கள்; இன்னும் சிலர் வைத்திய நூல்கள் தந்தவர்கள். இவர்களில் ஒருவரான சிவவாக்கியர் கூறும் தெய்வக் கருத்தைப் பார்ப்போம்.

இவ்வுலகில் மக்கள் பல தெய்வ வழிபாடு செய்கின்றார்கள். அரனே பெரிய தெய்வம் என்பார் ஒரு சிலர்; அரியே பெரிய தெய்வம் என்பார் வேறு சிலர். இவ்வாறு தாம் வழிபடும் தெய்வங்களின் பெயர்களைக் கூறிக் கொண்டு, கருத்து வேறுபாடு கொண்டு அடித்துக் கொள்ளுகின்றனர். இவர்களை நோக்கிக் கூறுகின்றார்- "மாந்தர்களே! எங்கள் தெய்வம்- உங்கள் தெய்வம் என்று கூறும் பேதத்தை நிறுத்துங்கள். தங்கம் ஒன்றுதான். அத்தங்கத்திலிருந்து பல்வேறு அணிகள் செய்வது போல் இவ்வுலகில் இறைவன் ஒருவன்தான். அவனே பல வடிவங்களைத்தாங்கி நம்முள் கலந்து நிற்கின்றான். இதனை அறியாது அரி, அரன் என்றெல்லாம் கூறுகிறீர்களே! அவ்வாறில்லை. ஒருவனாக நம் உள்ளத்துக்குள்ளே சிறந்து, எங்கும் ஆகி விளங்குகிறான் இறைவன்" அவனை அறியுங்கள் :-

'தங்கம்ஒன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மா லும்ஈசனும் சிறந்திருந்த எம்முளே
விங்களங்கள் பேசுவார், விளங்குகின்ற மாந்தரே!
எங்குமாகி நின்றநாமம் நாமம்இந்த நாமமே?

—சிவவாக்கியர்; சித்தர் ஞானக்கோவை.

என்று கூறுகின்றார்.

மேலும், மெய்யொளியாய், எங்கும் நிறைந்த பேரொளி. யாய்த் திகழ்பவனை எங்குச் சென்று தேடுவது? அவரே கூறுகின்றார்.

இறைவனை வெளியே தேடி அலையவேண்டாம். வேறு எங்கும் வெளியில் அவனைக் காணமுடியாது. அப்பெருமானை உள்ளே தேடுங்கள். உள்ளத்திற்குள்ளேயே சிந்தியுங்கள். மற்ற பொருள்களின் மேல் பற்று வைக்காது அவன் மேல் பற்றுகி நில்லுங்கள். அவன் புகழ் கூறும் நூல்களை ஒரே சிந்தையோடு உணர்ந்து பாடுவதோடு ஐம்புலன்களின் செருக்கையும் அடக்கி ஆள்வீர்; இவ்வாறு செய்தால் உங்கள் ஆணவமலம் அழியப் பெறும். சோதி வடிவமாக உங்கள் உள்ளத்துள்ளே தோன்றுவான் இறைவன். தோன்றிய அவன் அங்கே கோயில் கொண்டும் இருப்பான் என்கிருர்.

உற்ற நூல்கள் உம்முளே
உணர்ந்து உணர்ந்தும் பாடுவீர்;
பற்றை அறுத்து நின்றுநீர்
பராப ரங்கள் எய்தலிர்;
செற்ற மாவை உள்ளரைச்
செருக்க றுத்தே இருத்திடில்
சுற்ற மாக உம்முளே
சோதி என்றும் வாழுமே!

என்று சித்தராகிய சிவவாக்கியர் பாடுகின்ருர்.

## பத்தி

பத்திநெறி, சித்தர்கள் நெறிகளுள்ஒன்ருகும். இவ்வுலகில் வாழ்கின்ற உயிரினங்கள் தங்கள் தங்கள் வசதிக்கேற்பத் தங்கள் தங்கள் வாழ்வு முறையை வகுத்துக் கொள்கின்றன. எறும்புமுதல் எல்லா உயிரினங்களும் அவ்வாறே அமைத்துக் கொள்ளப்பார்க்கின்ருேம். மனிதன் தன்னுடைய அறிவின் துணையால் வாழ்க்கையை வகுத்துக் கொள்கின்ருன். சமுதாயத்தையும் அமைத்துக் கொள்கின்ருன்; சமுதாயம் நிலைக்கச் சில சட்டதிட்டங்களை ஏற்படுத்திக் கொண்டு அதன்வழி வாழத்தலைப்படுகின்ருன். இவ்வாறு அறிவின் துணையை நாடி வாழ்ந்தாலும், இயற்கையின் சூழ்நிலைகளால் பாதிக்கப்

படுகின்றான். மேலும் தன்னுள்ளிருந்து வெளிப்படும் ஆசை, அழுக்காறு போன்ற குணங்கள் விளைவிக்கின்ற துன்பங்களினால் துன்புறுகின்றான். அமைதியைஇழக்கின்றான். இவ்விதம் நிகழும் நிலைமைக்கு என்ன காரணம் என்று ஆராய்ந்தனர் நம்முன்னோர்கள். ஒரு முடிவுக்கு வந்தனர். மனிதனிடம் தோன்றும் அறிவை நம்புவதற்கில்லை; ஏனென்றால் அந்தஅறிவு எப்பொழுதுமேபயனை நோக்கமாகக் கொண்டு சிந்திக்கின்றது. தனக்கு வேண்டிய வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் கருவியாகவே அது மனிதனுக்குப் பயன்படுகின்றது. பிற உயிர்களைப் பற்றியோ, பிற மனிதர்களின் இன்ப துன்பங்களைப் பற்றியோ சிந்திப்பதில்லை. பிறர் பசியால் வாடத் தானுண்டு வாழத் தலைப்படுகின்றது. தன்னல வாதியாகவே அது அவனை ஆக்குகின்றது. இவ்வாறு தன்னல அறிவை மாற்றிப் பொதுநல அறிவாக எவ்வாறு மாற்றுவது என்று எண்ணினார்கள். மனிதனிடம் பிறக்கும் குறை அறிவை நிறை அறிவாக, தூய அறிவாக மாற்ற முயன்றனர். அறிவு, தூய்மை பெறுவதற்கு அறிவுக் கறிவாக விளக்கும் எல்லாம் வல்ல இறைவனோடு ஒன்றச் செய்யும் பத்தி உணர்வு கலக்க வேண்டுமென்று கருதினர். அறிவும் பத்தியும் கலக்கும் பொழுது, அறிவு தூய்மையை அடைகின்றது. தூய்மை பெற்ற அறிவு தன்னலத்தை விட்டுப் பொது நல அறிவாக மாறி விடு கின்றது. இந்த உண்மையைக் கண்ட ஞானிகள் பத்தியை வளர்க்கத் தலைப்பட்டனர். பத்தி செய்வது எவ்வாறு என்பதைச் சித்தராகிய பட்டினத்தார் கூறுகின்றார். இறைவன் திருவடியை நினைக்க வேண்டும்; உண்மை உள்ளத்தால் அந்தத் திருத்தாளைப் பத்தியுடன் சிந்திக்க வேண்டும்; அன்பு செய்யவேண்டும் ; காதலாக வேண்டும்; கண்ணீர் பெருக்க வேண்டும்; நினைந்து கசிந்து உளம் நெக்கு நெக்கு உருக வேண்டும்; அவன் நாமத்தை இடையறாது சொல்லித் துதிக்க வேண்டும்; அவ்வாறு செய்யும் தியானத்தால் ஆனந்தம் பெருகுகின்றது என்று உரைக்கின்றார்,

நீருர்த்த மேனி உரோமம்
சிலிர்த்துஉளம் நெக்குநெக்குச்
சோருய்க் கசிந்து கசிந்தே
உருகி நின்சீரடிக்கே
மாருத் தியானமுற்று ஆனந்த
மேற்கொண்டு மார்பில்கண்ணீர்
ஆருய்ப் பெருகக் கிடப்பதென்ருே?
கயிலா பத்தானே!

— பட்டினத்தார்; சித்தர்ஞானக்கோவை

என்று கயிலாயத்தானை பக்தி செய்ய வேண்டுமெனக் கூறுகின்ருர்.

இவ்வாறு பத்தி செய்யும்பொழுது சிலவகைச்சோதனைகள் நம்மை எதிர் நோக்கி வரும். கடலிலே அகப்பட்ட துரும்பு போலத் துன்பத்தால் அலைக்கும்: ஆலையில் கொடுக்கப்பட்ட கரும்பு போலப் பிழியும்; வலையில் அகப்பட்டுத் தவிக்கும் மானைப் போன்று நம்மை மயங்க வைக்கும்; அலைத்தும் பிழிந்தும், மயக்கிக் கொடுமைப் படுத்திஞலும், நாம் மெய்ப் பொருளாகிய இறைவனை மட்டும் மறக்கக் கூடாது. அவன் நினைவாகவே இருந்து பத்தி செய்ய வேண்டும். துன்பப் படுத்தும் அவனை எண்ணி மெழுகுபோல் உருகி அன்புசெய்ய வேண்டும். அப்பொழுது அவன் வெளிப்படுவான் காணலாம் என்று சொல்லுகின்ருர் சித்தராகிய கணபதிதாசர்:-

அலைதனில் துரும்பு போலும்
ஆலைவாய்க் கரும்பு போலும்
வலைதனில் மானைப் போலும்
மயங்கிநைந் தலைந்தாய் நீதான்
உலைதனில் மெழுகைப் போலும்
உருகிமெய்ப் பொருளை உன்னி
நிலைதனில் நின்று நாகை
லிங்கரைக் காண்பாய் நெஞ்சே!

என்று நெஞ்சிற்கு வழிகாட்டுகின்ருர் சித்தர்.

—கணபதி தாசர்; சித்தர் பாடல்கள்

"கடவுளைப் பகுத்தறிவைக் கொண்டு காண முடியாது! பக்தியினுல் தான் காணமுடியும். கண்ட பின்னும் கூட பக்தியைக் கொண்டுதான் காட்சியை நிறுத்திக் கொள்ள முடியும். நாம் அடையக் கூடும் மேன்மையை இறைவ னிடத்துக் கொண்ட உண்மைப் பக்தியைக் கொண்டே அடைய முடியும்" (அரிசன் 13—6—1936)

என்று காந்தியடிகள் கூறுவதை ஒப்பு நோக்கலாம்,

## அன்பு

"ஆண்டவன் நமக்குள் மறைந்து நிற்கின்ருன். நம்முடைய ஊனுக்குள், உயிருக்குள் அந்தரங்கமாக விளங்கு கின்ருன். நமக்குள் இருக்கும் ஆண்டவனைக் காண்பதற்குப் பலதுறைகள் உண்டு. அவற்றில் அஹிம்சை ஒரு துறை.

ஆண்டவனை எல்லா உயிருள்ளும் கண்டு, எல்லா உயிரும் பகவான் உருவமே என்பதை உணரவேண்டும். அதுவே அஹிம்சையாகும். அந்த உணர்வை, உயிர் உணர்ச்சிகளில் நாம் 'அன்பு' என்கின்ருேம். உயிர்களை ஒன்ருகப் பிணைத்துக் கட்டும் சக்தி அன்பாகும். அதுவே உயிர்களைக் கடவுளுடன், பிணைக்கின்றது"(1-6-42) -என்று கூறுகின்ருர் காந்தி அடிகள்

உண்மையில் மனித வாழ்க்கையில் தோன்றுகின்ற உணர்ச்சிகளுக் கெல்லாம் தலைசிறந்து நிற்கும் உணர்ச்சி அன்பு உணர்ச்சியாகும். விலங்கினம் முதல் மனித இனம் வரை எல்லா இனங்களும் அன்பு உணர்வோடு வாழக் காண்கின்ருேம்.

அன்பானது உள்ளத்தைப் பண்படுத்துகின்றது; ஒற்று மையை வளர்க்கின்றது; வாழ்வை உயர்த்துகின்றது; இதனுல் தான் திருவள்ளுவர் "அன்பின் வழியது உயிர் நிலை" எனக் கூறினுர் போலும்! இவ்வாறு வளர்ச்சியடைந்த அன்பு பாசக் கலப்புள்ளது. வாழ்வு நிலையில் நின்றுதான் அதனுல் செயல் ஆற்ற முடியும். அருள் நிலைக்குச் செல்ல முடியாது அருள் நிலைக்குச் செல்வதற்கு அவ்வன்பை இறைவன்பால் செலுத்த

வேண்டும். இறைவனைப் பற்றிப் படர்ந்து வளரும் அன்பு முதிர்கின்றது; முழுமையை அடைகின்றது. பாசம் அகன்ற தூய அன்பாக மாறுகின்றது. அத்தகைய அன்பில் இறைவன் அருள் அமைகின்றது என்று கூறுகின்றார் திருமூலர். 'அன்பே சிவம்' என்பது அவர் திருவாக்கு! மேலும், அந்த அன்பு உருகிக் குழையும்பொழுது, தெய்வ தெரிசனம் கிட்டுகின்றது என்றும் கூறுகின்றார். ''அன்பொடு உருகி அகங்குழை வார்க்-கன்றி, என்பொன் மணியினை எய்த வொண்ணாதே!'' எனவும் பகர்வர். இந்தக் கருத்தினையே,

தாயினும் அன்பன் அன்றோ — பசுவே!
சக்திக் குள்ளானவன் தான்?
நேயம் உடையவர் பால் — பசுவே
நீங்காது இருப்பானே!

என்று வலியுறுத்துகின்றார் சித்தராகிய இடைக் காடர்.

இத்தகைய தூய அன்பு மேலும் பெருக வேண்டும். அக்காலை நீரிற் குமிழியாகிய வாழ்க்கை இன்பம் விலகுகின்றது. புலன்களின் ஒடுக்கம் வளர்கின்றது. கருணை பிறக்கின்றது. காணுகின்ற உயிர்கள் எல்லாம் இறை மயமாகத் தோன்று-கின்றது. அனுபூதி நிலையை அடைகின்றது. அப்பொழுது சிவானந்தத் தேன் பொழிகின்றது. இத்தகைய நிலையை நான் அடைவது எக்காலம் என்று கேள்வி கேட்பதின் மூலம் அந்த வழி முறையையும், அதன்பயனையும் தெள்ளத்தெளியப் பாடுகின்றார் சித்தர்.

கண்ணால் அருவி கசிந்துமுத்துப் போலுதிர
என்னைப் பரம்பொருளை எண்ணுவது எக்காலம்?
ஆகம் மிகவுருக, அன்புருக, என்புருகப்
போக அனுபூதி பொருந்துவதும் எக்காலம்?
நீரிற் குமிழிபோல் நிலையற்ற வாழ்வைவிட்டுன்
பேரின்பக் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்?
அன்பை உருக்கி அறிவை அதன் மேற்புகட்டித்
துன்பவலைப் பாசத் தொடக்கறுப்ப தெக்காலம்?

கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம்?
தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழிய மனம் பூண்டிருப்ப தெக்காலம்?

—பத்திரகிரியார்; மெய்ஞ்ஞானப்புலம்பல்

என்று சித்தராகிய பத்திரகிரியார் பாடுகின்ருர். இத்தகைய அன்பு நெறியே சித்தர் நெறிகளுள் ஒன்ருகும்.

## அறஉணர்வும் பற்றற்ற தன்மையும்

சித்தர்கள் நம் வாழ்க்கைக்கு வேண்டிய அற நெறிகள் பலவற்றைத் தந்துள்ளார்கள். 'தருமம் தலைகாக்கும்'— என்பது நம் நாட்டுப் பழமொழியாகும். மனிதனுக வாழ்பவன் தம் வாழ்நாளில் அறம் செய்ய வேண்டும். அறமானது வாழ்கின்ற உயிர்களுக்குச் சிறப்பை அளிக்கும்: புகழைக் கொடுக்கும்; நன்மையையும் இன்பத்தையும் நாளும் நல்கும்; துன்பம் தொடருங்காலத்து கவசம் போன்று பாதுகாக்கும்: இறையருளைக் கூட்டுவிக்கும்; இத்தகைய சிறப்புத் தரும் அறத்தை ஏற்று அதன்படி ஒழுக வேண்டும். அவ்வாறு ஒழுகும் பொழுது அது நடைபெற விடாமல் வாழ்க்கையில் சில குறுக்கீடுகள் வந்து தடைப்படுத்தும். முதலாவது அலையும் மனம் ஒருவகைத்தடை; அடுத்து பேராசை ஒருவிதத் தடை; காமம் எழுந்து அது வேறு வகைத் தடையாக முன் நிற்கும், இத்தகைய தடைகளைக் கடந்து விட்டால் அறத்தின் சிறப்பை நாம் அனுபவிக்கலாம். இத்தடைகளைக் கடப்பதற்கு, இறையருளை இடையருது சிந்திக்க வேண்டும் என்று கூறுகின்ருர் சித்தர். இறையருளால் இவற்றை எல்லாம் கடப்பது எக்காலம் என்ற வினு மூலம் அறிவுறுக்கின்ருர்.

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம்?
பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு
நேசத்தின் உள்ளே நினைந்திருப்ப தெக்காலம்?
ஊனாகி ஊனில் உயிராகி எவ்வுலகுந்
தானாகி நின்ற தனைஅறிவ தெக்காலம்?
கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலில் ஒளித்தசிவம் ஒளிசெய்வ தெக்காலம்?
காட்டும் அருள்ஞானக் கடலில்அன்புக் கப்பல்விட்டு
மூட்டுகரு ணைக்கடலில் மூழ்குவது எக்காலம்?

—பத்திரகிரியார்: மெய்ஞ்ஞானப் புலம்பல்

என்று வினா மூலமாகக் கூறுகின்றார் சித்தராகிய பத்திர கிரியார். அடுத்து சித்தர் மத, சாதி வேற்றுமைகளை வெறுக்கின்றார். உலகில் சமயப் பிரசாரத்தில் தலைமைப் பீடத்திலிருக்கும் ஒரு சாரார் தெய்வங்களின் பெயர்களைச் சொல்லித் தங்கள் சமயத்தை வளர்க்கின்றனர். மற்றொரு சாரார் அவர்கள் தெய்வப் பெயரைச் சொல்லி ஆதரவு தேடு கின்றனர். இரு சாரார்களும் அடித்துக் கொள்ளக் காணுகின்றோம். இவர்களிடையே சமய பேதம் தலைதூக்கத் தெய்வ சிந்தனை போய் விடுகின்றது. இன்னும் மக்கள் சாதிகளின் பெயராலும் நிகழ்கின்ற கொடுமைகளைப் பார்க்கின்றோம். இந்த நிலைகளை நன்குணர்ந்து இதனை விட்டொழியுங்கள் எனக் கூறுகின்றார் பாம்பாட்டிச் சித்தர்

சமயபேதம் பலவான சாதி பேதங்கள்
சகத்தோர்க்கே அல்லாது சாதுக் களுக்கோ?

சிமயத்தில் ஏறினபேர் சித்தம் மாறுமோ
சித்தர்சித் தாந்தம் தேர்ந்தாடு பாம்பே!

என்று கூறுகின்றார்.

—பாம்பாட்டிச் சித்தர்; சித்தர்ஞானக் கோவை

மேலும் நிலையாமையை மிக நன்றாக அறிவுறுத்துகின்றார்கள் சித்தர்கள். நாம் வாழ்க்கையில் காணுகின்ற பொருள்கள் அழியக் கூடியன. கால ஓட்டத்தில் அவை நிலைப்பதில்லை. பெருஞ்செல்வம் சேர்ப்பார் ஒருவர், கால நிலை மாறும் பொழுது செல்வம் அவரை விட்டுப் போய்விடுகின்றது. முன் பிருந்த நிலை மாறி ஏழ்மையை அடைந்து விடுகின்றார். இவ்வாறு சமுதாயத்தில் எல்லாத்துறைகளிலும் கீழ் மேலா வதும், மேல் கீழாவதும் காண்கின்றோம். கண் முன்னால் நிலையானது என எண்ணுவது நிலையற்ற தொன்றாகி விடுகின்றது. அத்தனையும் வெளிமயக்காகும். நிலையற்ற பொருள்களின் மேல் பற்று வைப்பதைக் காட்டிலும் நிலை யான கச்சியம்பதியில் வாழும் இறைவனாகிய பரம்பொருளின் பால் பற்று வையுங்கள் என்று அறிவுரை கூறுகின்றார் சித்தராகிய பட்டினத்தார்.

நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ? அகமும் பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழில்உடம்பும்
எல்லாம் வெளிமயக் கேஇறைவா! கச்சி ஏகம்பனே?

— பட்டினத்தார்; சித்தர்ஞானக்கோவை

என்பார்.

அடுத்து, சித்தராகிய திருமூலர், வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய கடமைகள் சிலவற்றைக் கூறுகின்றார்.

மக்களே! இவ்வுலகில் சாதி வேற்றுமைகளை விட்டொழி யுங்கள். இன்னார் இனியர் என்று பாராது உங்களைத் தேடி வருபவர் யாராயிருப்பினும் சோறிடுங்கள். அவர்கள் பசிப் பிணி தீர்த்து விடுங்கள். நீங்கள் உண்ணும்பொழுது மெது வாக உண்ணுங்கள். பழமையான உணவை உண்ணுவதைத் தவிர்த்து விடுங்கள்; கரைந்து வரும் காக்கைக்குச் சோறி டுங்கள் என்று உணவளிக்கும் சிறப்பைத் தொகுத்துக் கூறுகின்றார்.

ஆர்க்கும் இடுமின்; அவர் இவர் என்னன்மின்;
பார்த்திருந் துண்மின்; பழம்பொருள் போற்றன்மின்;
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்;
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே!''

—திருமூலர், திருமந்திரம்

என்று அறவுரை பகர்கின்ருர்.

இத்தகைய அறநெறிகள் ஒளி வீசும் வைரப் பேழைகளாகும்.

## அடைக்கலம்

சித்தர்கள் அடைக்கல நெறியைப் பெரிதும் வலியுறுத்திச் சொல்லுகின்ருர்கள். அதற்குரிய வழியையும் நமக்கு வகுத்துக் காட்டுகின்ருர்கள். பொதுவாக நாம் வாழ்க்கையில் காணலாம். வலிமைவாய்ந்த ஒருவரிடம், வலிமையற்ற ஒருவர் போய் எல்லாம் நீங்கள்தான் உதவி செய்யவேண்டும் என்று சொன்னல் அப்புகழ்ச்சிக்கு அவரும் ஆட்பட்டு உதவி செய்யக் காணுகின்ருேம் இது மனித நிலையில் நிகழ்வது, இதுபோல எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும், வலிமை வாய்ந்தவனுமாக இருக்கும் இறைவனிடம் செல்லுங்கள் என்று கூறுகிருர் சித்தர். உண்மையிலே எல்லாம் வல்ல இறைவன் வலிமையைப் பற்றி நம்மாழ்வார் சொல்லுகின்ருர். இறைவன் பேரருளாளன். அவன் காற்ருகி, நெருப்பாகி, நீராகி, நிலமாகி, வானுகிக் காட்சி தருகின்ருன். இவ்வாறு வலிமை வாய்ந்த ஐம்பூதமாய் நின்று இந்த உலகை ஆள்கின்ருன். அதுமட்டுமா? அந்த ஐம்பூதப் பொருள்களின் உள்ளேயும் ஈசன் மறைந்து நின்று இவ்வுலகை, உலக உயிர்களை இயக்குகின்ருன். இவைகளை இயக்காமலும் தன்னுள் அடக்கிக் கொண்டு அமைதியாகவும் இருக்கின்ருன். இத்தகைய, அளவிடற்கரிய ஆற்றல் வாய்ந்த, வலிமை வாய்ந்த ஈசனைத் தான் வேதங்கள் பேசுகின்றன என்று திருமாலின் ஆற்றலை அழகாகப் பாடுகின்ருர் நம்மாழ்வார்.

திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம் அவை மிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய், அவை தொறும்
உடல் மிசை உயிர்எனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர் மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே!

என்பது பாசுரம். இவ்வாறு ஆற்றல்வாய்ந்த ஈசனிடம் அன்பு வைக்கவேண்டும். அவன் திருத்தாள்களே சரணம் என்று அவனிடம் சரணடைய வேண்டும். உள்ளத்தில் எவ்விதமான ஐயப்பாடுமின்றி நீயே கதி என்று நாம் அவனைச் சரணடைவதை சரணுகதி தத்துவம் என வைணவர்கள் சொல்வார்கள். அத்தகைய சரணுகதியை இறைவன் ஏற்று நம்மைக் காத்தருள் புரிகின்ருன். இத்தகைய சரணுகதியை நம்மாழ்வார்.

"ஒடுங்க அவன்கண்

ஒடுங்கலும் எல்லாம் விடும்"

என்று தத்துவமாப் பாடுகின்ருர் நம்மாழ்வார். இந்த சரணுகதியாகிய அடைக்கல நெறியே சைவ நாயன்மார்களுடைய நெறியுமாகும். எல்லாம் வல்ல இறைவனை நோக்கி மாணிக்கவாசகர் பாடுகின்ருர்:-

முழுமுதற் பெருமானே! உன்னுடைய அருள் பெற்றஅடியார்கள் உன்திருவடியை அடைந்து அழியாத பேரின்பத்தைப் பெற்ருர்கள். ஆனுல் நானே உன்னை வழிபடுகின்ற நெறியினை அறியமாட்டாதவனுக இருக்கின்றேன். நெறியறியாவிட்டாலும், உன்னையே எண்ணி எண்ணி உருகும் முறையினையும் அறியேன். ஆகவே உன்னை நான் எவ்வாறு அடைவது? ஒன்றும் அறியாத என்னை உன் அடைக்கலப் பொருளாக ஏற்றுக் காத்தருள் புரிவாயாக என வேண்டுகின்ருர்.

பிறிவறி யாஅன்பர் நின்னருட்
பெய்கழல் தாளிணைக்கீழ்
மறிவறி யாச் செல்வம் வந்தபெற்
ருர்உன்னை வந்திப்பதோர்
நெறியறி யேன்நின்னை யேஅறி
யேன்நின்னை யேஅறியும்
அறிவறி யேன் உடையாய் அடி
யேன் உன் அடைக்கலமே!

—மாணிக்கவாசகர்; திருவாசகம்

என ''அடைக்கலப்பத்து''—என்ற தலைப்பில் பாடி வேண்டுகின்ருர்.

இந்த நெறியை இன்னும் அழகாகக் காட்டுகின்ருர் பட்டினத்தார்.

அம்பலத்தரசே! அடைக்கலம் என்று உன்பால் வந்த எளியர்க்காக மிக எளிமையாக இறங்கி வந்து ஏற்றுக்கொள்ளுகின்ருய். அவர்கள் குறைகளை நீக்கி இறைவியோடு காட்சி தந்து அருள் புரிகின்ருய்! உன் கருணைக்கு அடைக்கலம் என்று வாயாரப் பாடுகின்ருர்.

இமையா நாட்டத் திறையே அடைக்கலம்!
அடியார்க்கு எளியாய் அடைக்கலம்! அடைக்கலம்!
கருணைகொண் டலையெறி கடலே! அடைக்கலம்!
தேவரும் முனிவரும் சென்று நின் றேத்தப்
பாசிழைக் கொடியோடு பரிந்தருள் புரியும்
எம் பெரு மானின் இணையடிக் கபயம்!
அம்பலத்து அரசே! அடைக்கலம் உனக்கே!

—பட்டினத்தார்; சித்தர் ஞானக்கோவை

என்று பாடி, அழியாத நிலை பெற்ற அவன் திருவடியில் அடைக்கலமாகச் செல்லும் நெறியினைச் சித்திரிக்கின்ருர் சித்தர்.

சித்தர்கள் ஞானம் பெற்றவர்கள் ; அவர்கள் வாசி என்ற மூச்சினை அடக்குபவர்கள் ; உணவைக் குறைத்து உடல் இயக்கத்தைக் குறைத்தவர்கள்; யோக சித்தியால் மனத்தை ஒருமுகப்படுத்தி, குண்டலிசக்தியை எழுப்பும் ஆற்றல்வாய்ந்தவர்கள்; ஐம்புலன்களையும் தன் வசத்தில் வைத்திருப்பவர்கள். அவர்கள் ஞான நெறியினைப் பற்றி அருமையாகக் கூறுகின்றார்கள்.

மனம் பொல்லாதது; அது குரங்கினைப் போன்றது, ஆசைவாய்ப்பட்டுக் கண்ட இன்பங்களை நாடித் தாவும்; தீயவை எனத் தெரிந்தாலும் அதன் சுவையில் மயங்கி அதனை விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்ளும். இவ்வாறு செல்லும் மனத்தை அதன் வழி செல்லாது அடக்க வேண்டும். ஐம்புலன்களையும் தன் வசப்படுத்த முயலவேண்டும். இதற்கெல்லாம் பற்றுக் கோடாக இறைவனை எண்ணி அவன்பால் அன்பு செய்ய வேண்டும்; அந்த அன்பு பக்தியில் கண்ணீர் பெருக்க வேண்டும். அதற்கு மேலாக அறவழி நின்று அவனையே அடைக்கலமாகப் புகவேண்டும். இவ்வாறு மனதை ஒருமுகப் படுத்தினல் ஞானம் பிறக்கின்றது. எல்லாம் இறைமயம் எனத் தெளிந்த நிலையில் இறையருள் பிறக்கின்றது. அந்த நிலையில் அவன் ஞானி ஆகின்றான்.

''புலன்களை எல்லாம் அடக்கி என்னையே கருத்தில் கொண்டு மனத்தை நிலை நிறுத்த வேண்டும். புலன்கள் எவனுடைய வசத்தில் உள்ளனவோ அவனுடைய ஞானம் நிலைபெற்றதாகும்" என்பார் கீதையில் கண்ணபிரான்,

உலகத்தில் ஒருவன் அறிவு பெற்றவனாக இருக்கலாம்; அல்லது சுத்த வீரனாக இருக்கலாம்; ஆனால் இவர்கள் மனத்தோடு போராடும்பொழுது தோற்று விடுகின்றார்கள். மன உணர்ச்சிகள் அவர்களை நுட்பமாக ஏமாற்றி விடுகின்றன. காரணம் மனத்தை வசப் படுத்தும் பயிற்சியில்லை. அதற்கு மேலாக அதனை இறைவன்பால் திருப்பும் வலிமை இல்லை,

ஆகவே தோல்வி அடைகின்றனர். தெய்வத்தினிடத்துத் திருப்பிய ஞானியோ வெற்றி பெற்று நிலையானவராக ஆகி விடுகின்றார். இந்த கருத்தை:-

வாறான உலகத்தில் சுத்த வீரன்
 மனத்தோடே போராடி அறிவில் மாள்வான்
கூறான ஞானி யென்றால் லிங்கம்புக்குக்
 குறியான அம்பலத்தில் சேர்வா னப்பா!

— சட்டை முனி; சித்தர் ஞானக்கோவை

அடுத்து, இராமலிங்க அடிகள் இறைவனை நோக்கிக் கூறுகின்றார்.

சிவகாம வல்லி மணவாளா! நான் என்ன பாவம் செய்தேன். என் மனக்குரங்கு போடும் ஆட்டத்தைப் பார்க்க முடியவில்லை, பிறகு ஒருவாறு உன் அருளால் அடக்கி விட்டேன். இவ்வுலக இன்பம், பற்று எல்லாவற்றையும் துறந்து விட்டேன்; என் உயிர் உடல், பொருள் எல்லா வற்றையும் உனக்குக் காணிக்கையாக ஆக்கிவிட்டேன். இனி என்பால் ஒன்றும் இல்லை; உன்னைக்காணவேண்டும் என்று ஆசைமயமாகி நிற்கின்றேன். உன் குறிப்பை நான் அறியேன். சரியான தருணம் வந்துவிட்டது. உன் ஞானமுதை வழங்குவாயாக என்று வேண்டுகின்றார்.

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
 பதிவெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும்
 தவிர்த்தேன்
ஆவியுடல் பொருளையுன்பாற் கொடுத்தேன்உன் அருட்பேர்
 ஆசைமய மாகிஉனை அடுத்துமுயல் கின்றேன்
கூவியெனை ஆட்கொள்நீ நினையாயோ நினது
 குறிப்பறியேன் பற்பலகால் கூவியிளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
 தெருள்நிறைவான் அமுதளிக்குந்தருணமிதுதானே!

—இராமலிங்க அடிகள்; திருஅருட்பா

என்று வேண்டுகின்றார்.

